# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

## நந்தன - கார்த்திகை - 2012 - நவம்பர்



5

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன – கார்த்திகை – 2012 – நவம்பர் இதழ் – 5

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனிச் சுற்றுக்கு

உ
சிவமயம்

## இறை வணக்கம்

வானவர் அசமாந் தொடர்பினால் உலகோர்
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வான அரதன மணிஅறு முகனை
மாசறு கொற்றவாள் இறைவைய
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாநை
வான வரதனாம் முத்திராம ஈச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.




# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

மிக அண்மைக் காலமாக வன்முறை, கொலை, கொள்ளை மிக அதிகமாகப் பெருகி வருகின்றன. மதச்சண்டை, சாதிச் சண்டை, பதவிச் சண்டை, சொத்துச் சண்டை, ஒழுக்கம் தவறிய உறவுகள் இவையே பெரும்பாலும் கொலை, வன்முறைகட்குக் காரணம் ஆகின்றன. சிந்தித்துப் பார்த்தால் காரண காரியங்கள் மிக மிக அற்பமாகத் தோன்றுகின்றன. எளிதில்பேசித் தீர்த்துக் கொள்ளக் கூடியனவாக உள்ளன.

இச்செயல்களுக்கு முக்கியமாக நெறிமுறை தவறியேனும் பொருள், பதவி, அதிகாரம், புகழ் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்கிற வெறி. அதுவும் விரைவில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என விழைவதே.

அற்பமான ஊராட்சித் தேர்தலில் ஏற்பட்ட பகை காரணமாக கூலிப்படை கொண்டு மூன்று உயிர்கள் பறிக்கப்பட்டுள்ளன. அதுவும் இளந்தளிர்களும் தாக்கப்பட்டுள்ளன. மிகப் பெரிய செல்வந்தர்களான அண்ணன் தம்பி சொத்துத் தகராறு காரணமாக ஒருவரை ஒருவர் சுட்டுக் கொண்டு மாண்டுள்ளனர். இருவருக்கும் ஆறாயிரம் கோடி சொத்துக்கள் உள்ளனவாம். மேலும் சில கோடிகள் இருவருக்குமே எண்ணிக்கைதான். பயன் அதிகம் இல்லை. பின்னர் ஏன் ஒருவரை ஒருவர் சுட்டுக் கொல்ல வேண்டும் ?

செல்வமும் அதிகாரமும் சேரச் சேர, பயன்பாட்டை விடப் போதை தான் அதிகமாக ஏறும்போலும். அதிகாரப் போதையும் அகந்தையும் சேரும் போது மனிதர்களாக இல்லாமல் அரக்கர்களாக

மாறி விடுகிறார்கள். இதிகாசப்புராண, இராவணர்களாக, இரணியர்களாக, துரியோதனர்களாக , சூரபத்மர்களாக மாறி விடுகிறார்கள்.

மேலும் மேலும் பொருளும் பதவியும் அதிகாரமும் வேண்டி ஓடி ஓடித் தேடுகிற மனிதர்கள் எக்காலத்தும் நிம்மதி, அமைதி என்பவற்றை அனுபவிக்காமலே ஏன் அறியாமலே கூட அழிகின்றார்கள்.

பிறக்கின்ற குழந்தை குண பேதம் இன்றித் தெய்வத்திற்கு ஒப்பானது. அவை வளர்கின்ற காலத்து வடிவமைப்பது பெற்றோரும், ஆசிரியர்களும். பெரும்பாலான குண நலன்கள் இவர்களால் உருவாக்கப்படுபவையே. முதலில் கிடைப்பவற்றைப் பகிர்ந்து கொள்ளப் பழக்கப்படுத்தப்படுகிறார்கள். அம்மா, அப்பா, அண்ணன், தம்பி எனக் குடும்பம் பின் உற்றார், ஊரார், மொழிபேசுவார், மாநிலத்தார் எனத் தன் உறவுகளை அன்பைப், பாசத்தை விரிவுபடுத்திக் கொள்கிறார்கள். இப்படி அன்புடன் பாசமும் கொண்டு வளர்க்கப்படுகின்றவர்கள் வன்முறைக்குப் போவதில்லை.

வழி தவறுபவர்களைச் சமூக இயக்கங்கள் ஆரம்பத்தே அடையாளங்கண்டு நெறிப்படுத்த முயல வேண்டும். சாதிப்பற்று இருக்கலாம்– வெறிகூடாது; கொள்கை, கட்சிப்பற்றுஇருக்கலாம் – வெறிகூடாது, அகந்தை அறவே கூடாது. பொருள், புகழ், அதிகாரம் அனைத்தும் தேவைதான். அத்து மீறினால் துயரமே, இன்னல்களே விளையும்.பொருள் மிக்கோர் அறவழியிலே அதனைச் செலவு செய்தால் மன அமைதி, திருப்தி கிட்டும். நல்ல தூக்கம் வரும். கவலை வராது.

சென்னையைச் சேர்ந்த திருவாளர் K.V. ரமணன் என்பவர் 110 கோடி கொடை நல்கி ஷீரடி சாய்பாபா வளாகத்தில் பக்தர்கள் தங்கக் கட்டடம் கட்டிக் கொடுத்துள்ளார். புகைப்படத்தில் பார்த்தால் எளிமையாகத் தெரிகிறார். வருமான வரிக்காகத் தானம் செய்பவராக இல்லாமல் அறத்திற்காக, பக்திக்காகத் தர்மம் செய்கிறவராகத் தெரிகிறார். அப்படி இருந்து விட்டால் செல்வம் பயன்படும். துயர் தராது; வாழ்வில் நிறைந்த நிம்மதி வரும்.

அன்பும் அறனும் கொண்டு வாழுங்கள்; வாழப்பழக்குங்கள்.

ஆசீர்வாதங்கள்

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

முனைவர். நா. வள்ளி

**திருநகரப் படலம் :**

பாண்டி நாட்டு வருணனையைத் தொடர்ந்து அந்நாட்டின் அணியெனத் திகழும் கழனி மாநகரின் வளமும் சிறப்பும் திருநகரப் படலத்தில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

பண்கவர் மொழியொடு பரமர் மேவியது
ஒண்கவர் மதியினார் உவந்து சேர்வது
மண்கவர் நகரெலாம் வழுத்தும் சீரது
கண்கவர் பெருவளக் கழனிமாநகர்.

பண்ணை வென்ற மொழியாளாகிய உமையவளும், மதிசூடும் மகேசனும் உவந்து உறைகின்றதனால் பல்லோரும் விரும்பும் சிறப்புடையதாக விளங்குகின்றது கழனி மாநகர். திருமகளால் திருவும், கலைமகளால் நற்கலைகளும், மலைமகளால் நல்வீரமும் நிறையப் பெற்று விளங்குவது அந்நகர்.

வேண்டுவோர்க்கு வேண்டுவன நல்கும் திறத்தால் கற்பக விருட்சத்தை நிகர்த்த கழனிமாநகர் மற்றொரு வகையில் கண்ணுதல் கடவுளை நிகர்த்ததாக விளங்குகிறது என்கிறது கோயிலூர்ப் புராணம்.

விண்ணுதல் வரமெலாம் வீசியீற்றினும்
எண்ணுதல் சிறிதுமின்றி இருக்கும் நீர்மையால்
ஒண்ணுதல் ஒருபுறம் உவப்ப மேவிடும்
கண்ணுதல் நிகர்வது கழனி மாநகர்

அநேக வரங்களை அள்ளிவீசினாலும் ஆசையற்றிருக்கும் மக்களை உடைய நீர்மையால் வேண்டுதல் வேண்டாமையுடைய இறைவனை ஒத்திருந்ததாம் கழனிமாநகர்.

கயிலாய நாதனே, கைலையைவிட்டு இங்கு வந்து மனையாளொடும் மகாரொடும் விரும்பி உறைகின்றார் என்றால் கழனி மாநகரின் சிறப்பைச் சொல்லவும் வேண்டுமோ என்று கழனிமாநகரின் சிறப்புக்களையெல்லாம் வரிசைப்படுத்திய கோயிலூர்ப் புராணம் அடுத்து கழனி மாநகரின் வளங்களையெல்லாம் எடுத்துரைக்கிறது.

கழனிமாநகர் வளம் :

வானுயர் மாடமாளிகைகளும் வண்டுகள் சூழ்ந்த சோலைகளும் நிறைந்த கழனியம்பதி விண்மீன்களுக்கு இடையே காணப்படும் நிலவை ஒத்திருந்தது, சோலைகளிலுள்ள மலர்கள் சொரியும் தேன், வெள்ளமென ஓடி நிலத்தைச் சேறாக்கிற்று. கழனிமாநகரைச் சுற்றிலும் தென்னஞ்சோலைகள் குலை குலைகளாகக் காய்களையுடையவாய் நிறைந்து காணப்பட்டன. வெங்கதிரோன் வாட்டுவதால் ஏற்பட்ட தாகம்தீர மக்களுக்கு இன்சுவை இளநீரை வேண்டிய அளவு தந்தன.

கழனிமாநகரின் மற்றொருபுறம் கரும்புத் தோட்டங்கள் செழித்து வளர்ந்திருந்தன. அக்காட்சியை அழகிய கற்பனை மூலம் விளக்குகிறார் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. தன்னை வெறுத்தல்லவோ கழனிமாநகரில் அருந்தவர் தவத்தை மேற்கொண்டுள்ளார்கள் என நினைந்து மன்மதன் தன் வில்லாகிய கரும்பை வளைத்துக் கழனி மாநகரை முற்றுகையிடுவது போல இருந்தது என்கிறார் மகாவித்துவான்.

“தனைவெறுத்து அருந்தவர் தவஞ்செய் மாநகர்
தனைவளைத்து அமர்க்கவேள் சார்ந்து வெஞ்சிலை
தனைஅறக் கொண்டெனத் தழை கரும்புகள்
தனையறக் கழனியுள் ததைவ எங்கணும்”

மாரவேள், கழனிமாநகர் அருந்தவத்தவரோடு போர் தொடுத்து வெல்ல முடியாமல் தோல்வியே கண்டான். அவன் தோற்று ஒடுங்கியதற்கு அடையாளமாகக் கழனிமாநகரில் குயில்களின் குரல்கள் ஒடுங்கின.

கழனிமாநகரைச் சுற்றியுள்ள அடர்ந்த பசுமையான வனங்கள் கடலை ஒத்திருந்தன. அவ்வனங்களின் மீது பிறை நிலவு தவழுகின்ற காட்சி கடலின் மேல் செல்லுகின்ற அம்பியை (படகு) ஒத்திருந்தது. வானிலவைத் தொடுமளவு நீண்ட குருத்துக்களைச் கொண்ட வாழைமரங்கள் அந்நகரில் நிறைந்திருந்தன.

கழனியம்பதியின் வயல்களில் நெற்பயிர்கள் நன்கு வளர்ந்து, வளைந்து காற்றில் அசைகின்ற காட்சி திருநெல்லை நாயகி, அரதனவல்லி என்ற சிறுமி வடிவில் வந்து தங்களைக் காத்த அந்த அருஞ்செயலுக்குத் தங்கள் நன்றியைத் தெரிவிக்கும் முகமாக வணங்குவதைப் போல இருந்தது என்று, உவமை வாயிலாக, திருநெல்லையம்மன் தன்பக்தனுக்காகச் சிறுமி வடிவில் வந்து அவனது வயலைக் காத்த நிகழ்ச்சியைக் கூறுகிறார் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை,

“பிறைநுதற் பேரருள் நெல்லை நாயகி
நிறைதரக் காத்தலின் நிலவு நெற்பயிர்
அறையும் அந்நன்றியை அறிந்த வாமென
விறைகெழு கதிர்களால் எதிர் வணங்குமே”

அடுத்து வரும் காட்சியிலும், தலபுராணச் செய்தியை உவமை வாயிலாகக் கூறுகிறார் பிள்ளை, நீர் நிறைந்த தடாகத்தின் கரையிலே நின்ற கமுக மரங்கள் திடுக்கிட்டு விதிர் விதிர்க்குமாறு தடாகத்திலுள்ள கயல்கள் தாவுகின்றனவாம், இக்காட்சி, கொற்றவாளீசர் தந்த

இறைவாளினைக் கண்டு விதிர் விதிர்த்து நின்ற பாண்டிய மன்னனைப் போல இருந்தது என்கிறது கோயிலூர்ப் புராணம்.

ஓடைகளிலும், தடாகத்திலும் தாமரைப்பூக்கள் மலர்ந்திருந்தன. அவற்றின் கரைகளில் கமுக மரங்களும், வாழைமரங்களும், நாகவல்லிக் கொடிகள் போன்ற பல்விதமான மரஞ்செடிகொடிகளும் வனப்புற வளர்ந்திருந்தன. தடாகத்தின் கரைகளில் பூத்துள்ள கொடிகள் மீது, கயல்கள் தாவிப்பாயும் காட்சி வீரவாளெடுத்து ஆடும் கூத்தாடும் மகளிரைப் போன்றிருந்தது.

வானளாவ உயர்ந்து குலைகுலையாகக் காய்த்துத் தொங்குகிற கமுக மரத்திலிருந்து கமுகங்காய் உதிர்ந்து அருகில் பாரம் தாங்காது வளைந்திருந்த வாழைக்குலையின் மீது வீழ்ந்தது. இக்காட்சி இராமாயண நிகழ்வு ஒன்றை நினைவுபடுத்துவதாக உள்ளது என்கிறார் மகாவித்துவான். தசரதராமன் கவணில் விட்ட மண் உருண்டை, கூனியின் கூனல் முதுகில் விழுந்த காட்சியைப் போல இருந்ததாம் கமுகங்காய் வாழைக்குலையின் மீது விழுந்த காட்சி.

கழனியம்பதியைச் சுற்றியுள்ள பொழில்களிலுள்ள உயர்ந்த மரங்களால் தான் தேவலோகத்திற்கு நிழல் கிடைக்கிறது. இங்கு பூத்துள்ள மலர்களின் நறுமணத்தைப் பெற்றதால் தான் கற்பகமரம் மணம் பெற்றுத் திகழ்கிறது. இல்லையேல் பொற்பூவிற்கு மணமில்லை என்றெல்லாம் கழனியம்பதியின் வளத்தை வருணிக்கின்ற மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் பாடல்கள் கற்பனை வளமும், உவமை வளமும் நிறைந்து கற்போரை மகிழ்விப்பதாக உள்ளன.

- தொடரும்

# கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் வரலாறு

**(காப்பியக் கவிஞர் நா. மீனவன்)** (தொடர்ச்சி..)

## கோவிலூர் ஆண்டவர்

### ஆண்டவரைத் தேடி வந்த மாணாக்கர் :

தம்மைச் சரணடைந்த அடியார்க்கெல்லாம் ஞானதானம் செய்ததோடு அடியவர்களுக்கு அன்னம் முதலியன அளித்து வந்தார். அதனால் அவரைத் தேடித் தேவிகோட்டை இராமநாதன் செட்டியார், சுப்பிரமணியன் செட்டியார் புதல்வர் அண்ணாமலை அய்யா, சின்னான் செட்டியார், நேமத்தான் பட்டிப் பெரியகருப்பன் செட்டியார் புதல்வர் பழனியப்ப அய்யா, கோட்டையூர் இலட்சுமணன் செட்டியார் புதல்வர் அண்ணாமலை அய்யா, இராயபுரம் முத்துக் கருப்பன் செட்டியார் புதல்வரான இராமநாதன் செட்டியார் முதலான அறுவர் கண்டனூர்க் கருத்தய்யா, அரிமளம் சுப்பிரமணிய அய்யா ஆகியோருடன் ஆண்டவரைத் தேடி வந்து வேதாந்த வித்தகர் ஆயினர்.

### ஆண்டவர் திருமுகம் அனுப்பி மரம் பெறுதல் :

கொற்றவாளீசர் ஆலயக் குடவரை வாயிலுக்குக் கதவு செய்யக் கருதிய ஆண்டவர் அதற்கான பலகையைத் தேடிய காலத்தில் திருக்கோட்டியூருக்கு அடுத்த ஏரிக்கரையில் பெரிய இலுப்பை மரம் ஒன்று இருப்பதை அறிந்து பணியாளர்களை அழைத்து அம்மரத்தை வெட்டிக் கொண்டு வந்தால் தக்க பொருள் கொடுப்போம் என்று கூறினார். அவர்களும் அங்கு சென்ற போது அவ்வூரார்கள் இம்மரத்தில் ஒரு முனி இருக்கின்றது; தங்களால் முடிந்தால் வெட்டிச் செல்லுங்கள் என்று கூற அவர்கள் ஆண்டவரிடம் அதனைத் தெரிவித்து அதனை நாங்கள் வெட்டினால் எங்கள் குடி கெட்டுவிடும் எனச் சொல்ல ஆண்டவர் அவர்களை நோக்கி நீங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம் நாம் கொடுக்கின்ற திருமுகத்தை அந்த மரத்தில் கட்டிவிட்டு

உடனே வெட்டி வாருங்கள் என்று கூறி ஓர் ஓலைத் துண்டில் இவ்விலுப்பை மரம் எமது சிவபிரான் ஆகிய கொற்றவாளீசர் ஆலயக் குடவரைக் கதவு செய்யத் தேவைப்படுவதால் அம்மரத்தை விட்டு வேறு ஒரு மரத்திற்குச் செல்லக் கடவாய் என்று எழுதிக் கொடுத்தனர். அதன்படியே ஆண்டவர் ஓலையை அம்மரத்தில் கட்டி விட்டு அம்மரத்தைப் பலகையாக்கிக் கோவிலூர் கொண்டு வந்து சேர்த்தனர். அம்மரத்தால் குடவரைக் கதவு செய்யப்பட்டது.

**ஆண்டவர் மடம் உண்டாக்குதல் :**

ஆண்டவர் தம் அடியவர்களை நோக்கி அவரவர் கிராமங்களில் தனியே தியானிப்பதற்கும் வழிபாடு இயற்றுதற்கும் வேதாந்தம் பயிலுதற்கும் சாதுக்கள் வசிப்பதற்கும் ஏற்ற வகையில் மடங்களையும் ஆலயங்களையும் நந்தவனங்களையும் சத்திரம் பாடசாலை முதலியவற்றையும் உண்டாக்கும்படி ஆணையிட்டார். அடியவர்களும் அவ்வாறே செய்து வந்தனர். இன்றளவும் அப்பணிகள் நன்முறையில் நடத்தப்பெற்று வருவது கண்கூடு. அதனைப் பாராட்டிச் சேந்தனி வரகவி பழனியப்ப அய்யா

மடம்உண்டோ சிவாலயங்கள் மிகுதி உண்டோ
வாசிட்டம் படிப்ப(து)உண்டோ மனத்துள் ஞானத்
திடம்உண்டோ நால்வர்தமிழ் படிப்பார் உண்டோ
திவ்வியமாம் உதாரம்முதல் குணங்கள் உண்டோ
விடம்உண்டோன் அடியர்குழாம் மிகுதி உண்டோ
மெய்அறம்சத் திரம்விரைப்பூங் காவும் உண்டோ
வடகயிலைக்(கு) இறைவன்எனும் முத்து ராம
வள்ளல்திருக் கழனிநகர் வாரா முன்னம்.

என்று பாடினார்.



**மடாலய வளர்ச்சிக்காகக் கிராமம் வாங்குதல் :**

தேவி கோட்டை இராமநாதன் செட்டியாரும் இராயபுரம் முத்துக்கருப்பன் செட்டியார் புதல்வர்களும் இல்லறவாசிகள் ஆகிய ஏனைய அடியார்களும் ஒன்று சேர்ந்து களத்தார் என்னும் கிராமத்தையும் அதன் உட்கடையான சில கிராமங்களையும் வாங்கி மடாலயத்திற்கு வரும் அடியவர் அன்னம் உண்ணவும் ஆடைச் செலவுகளுக்கும் உதவியாக அளித்தனர்.

**ஆண்டவரை மேலும் சரணடைந்தோர் :**

தேவிகோட்டை வினைதீர்த்தான் செட்டி புதல்வர் அருணாசலம், கண்டனூர்ப் பெரிய கருப்பன் செட்டி புதல்வர் அருணாசலம் ஆகிய இருவரும் ஆண்டவரைக் குருவாக ஏற்று அடியவர் ஆயினர்.

**கைலாய நாதர் நித்திய கல்யாணி :**

ஒரு முறை ஆண்டவர் குட்டையனாசாரியை அழைத்துச் சென்று அதளைக் கண்மாயில் பூசையில்லாது இருந்த அகத்தீசர் என்னும் இலிங்கத்தை எடுத்து வந்து கொற்றவாளீசர் ஆலயத்தில் அமைக்கும் எண்ணத்துடன் கிழக்கு நோக்கிச் சென்றார். அங்கு முன்னரே இருந்த பஞ்சாக்கர நாயகி ஆலயத்தின் வடக்கே உள்ள குப்புச்சி ஊருணிக்கு அருகில் இருந்த மறவன் கோட்டை என்று ஒரு கிராமம் அழிந்து போனமையால் அங்கே அழியாதிருந்த ஆலயத்திலே உள்ள கைலாய நாதருக்கும் நித்திய கலியாணி அம்மைக்கும் ஒருகால வழிபாடு செய்யும்படி கொற்றவாளீசர் ஆலயக் குருக்களை ஏற்பாடு செய்திருந்தார். அவ்வாலயத்தின் அருகிலே ஆண்டவர் வரும்போது நித்திய கலியாணி அம்மை ஒரு பனையளவு உயரம் தோன்றி வெளிப்பட்டு ஆண்டவரை நோக்கி ஒரு கும்ப சலத்திற்கும் ஓர் உண்டை அன்னத்திற்கும் இருவரும் காத்திருக்கிறோம் என்று சொல்லி மறைந்தனள். ஆண்டவர் சென்று கலசம் அற்ற நிலையில் இருந்த கைலாச நாதரையும் நித்திய கலியாணியையும் கொற்றவாளீசர்

ஆலயத்திற்குக் கொண்டு வந்து திருநெல்லைக்கும் கொற்றவாளீசருக்கும் இடையில் நிலைநாட்ட எண்ணினார்.

ஆனால் அவ்விடத்தில் ஒரு தீய சக்தியுடைய தேவதையை ஊர் மக்கள் வைத்து எருமைக்கடாப் பலி கொடுத்து வழிபட்டு வந்தமையைக் கண்ட ஆண்டவர் சிவாலயத்தில் இச்சில்லறைத் தேவதை இருப்பது முறையன்று; எனவே அதனைப் பீடத்தோடு பெயர்த்துக் கண்மாயில் போடுங்கள் என்று கட்டளை இட்டார். தொழிலாளர்கள் நாங்கள் அதனைப் பெயர்த்தால் குடியோடு அழிந்து போவோம் என்று கூறி மறுத்து விட்டனர். ஆண்டவரும் தாமே கடப்பாரையை எடுத்து அப்பீடத்தை இடித்துப் பெயர்த்தார். உடனே தொழிலாளர்களும் நாங்கள் இனி அஞ்ச மாட்டோம்; கொண்டு போய்க் கண்மாயில் போட்டு விடுகிறோம் என்று கூறிக் கொண்டு போய்க் கண்மாயில் போட்டனர். அது முதல் அவ்வூரிலுள்ள இளம்பெண்களைத் துஷ்ட தேவதை பற்றி அலைத்து வந்தது. அது கண்ட ஒரு வயதான பெண் அங்கு போய்க் கொண்டிருந்த ஆண்டவரைக் காட்டி இவரல்லவா உன்னைப் பெயர்த்து எறிந்தவர் அவரை விட்டு விட்டுப் பெண்களை வருத்துவது நியாயமா ? என்று கேட்க அத்தேவதை அப்பெண்ணை நோக்கி அதுவோ வெட்டவெளி; அதனிடத்தில் என்னாற்றல் செல்லாது என்று கூறியது. பிறகு ஊரவர் ஒன்று கூடி அதனைக் கண்மாய்க் கரையில் நிலைநாட்டி முன்போல வழிபட்டு வரத் தொடங்கினர். ஆண்டவரும் தாம் எண்ணியபடியே கைலாசநாதரையும் நித்திய கலியாணியையும் திருநெல்லைக்கும் கொற்றவாளீசருக்கும் நடுவே இருக்குமாறு அமைத்தார். அன்று முதல் அவர்களுக்கும் அபிடேகம் வழிபாடுகள் தினந்தோறும் நடைபெற்று வந்தன.

**பஞ்சாக்கர நாயகி ஆலயத் திருப்பணி :**

மறவன் கோட்டையில் இருந்த கைலாச நாதரையும் நித்தியகலியாணி அம்மையையும் ஆண்டவர் கோவிலூர் கொண்டு வந்த பொழுது அங்கிருந்த பஞ்சாக்கர நாயகி அவரை நோக்கி நான்

மட்டும் இவ்விடம் தனியே இருப்பது உமக்கு நீதியோ ? என்று அசரீரியாய் வினவ ஆண்டவர் அவ்வம்மையாரையும் எடுத்து வந்து ஏரிக்கரையில் வைத்து ஆலயத் திருப்பணியைத் தொடங்கினார். அப்பொழுது உடனிருந்த நல்லான் என்பவர் ஆண்டவரை நோக்கித் திருநெல்லை ஆலயத்துக்கெனச் சேர்த்த பொருளைப் பிடாரிக்குச் செலவிடுதல் நியாயமா ? என்று பிடாரியைச் சற்றுத் தாழ்த்திச் சொல்லக் கேட்ட ஆண்டவர் அவரை நோக்கி

கண்ட பொருள்அல்ல காணாப் பொருள்அல்ல கண்டபொருள்
மண்டும் இருள்அல்ல மாயும் ஒளிஅல்ல மன்னும்ஒளி
பண்(டு)என் பதும்அல்ல இன்(று)என் ப(து)அல்ல பராபரமாம்
அண்டம்அ டங்கஅ டங்காப்பெ ருவெளி ஐயுளியே.

என்ற பாடலைப் பாடி இவ்வாறிருக்க நீ ஐயுளி அம்மையைத் தாழ்வாகக் கருதுவது உன்அறியாமையைக் காட்டுகின்றது என்று நகைத்தார். பின்னர் அவ்வாலயப் பணியை நிறைவு செய்து திருக்குடநீராட்டும் செய்து வைத்தார். கொற்றவாளீசர் ஆலயச் சிவாச்சாரியார் மூலம் இன்றளவும் பஞ்சாக்கர நாயகி என்ற ஐயுளி அம்மைக்கு ஒருகால வழிபாடு நடந்து வருகின்றது.

**நல்லான் செட்டியார் ஆண்டவர் பெருமை அறிதல் :**

அடியவர் ஆகிய நல்லான் ஒரு நாள் ஆண்டவர் தரிசனம் பெற வரும்போது ஒரு காரியத்துக்காகத் திருநெல்லை அம்மை கோவிலில் நிமித்தம் கேட்கும் எண்ணத்துடன் வந்தார். ஆண்டவர் நல்லான் வந்த காரணத்தைக் கேட்டதும் நல்லான் நன்னிமித்தம் கேட்க வந்ததாய்ச் சொன்னார். ஆண்டவர் அவரை நோக்கி உனக்கு இன்று நன்னிமித்தம் ஆகாது நீ வீட்டுக்குச் செல் என்றனர். ஆயினும் நல்லான் ஆலயம் சென்று அம்மையின் சந்நிதியில் நின்று வணங்கிய பொழுது அங்கு பல்லி நல்ல நிமித்தம் சொல்லவில்லை. உடனே நல்லானும் ஆண்டவரின் ஆணையை மீறி நாம் இங்கு வந்தோமே

என்ற கவலையோடு நின்றிருந்ததைக் கண்ட ஆண்டவர் நான் கோவிலுக்குள் இருந்து பல்லியாய்க் கூப்பிட்டால்தானே நீ நம்புவாய் அங்கு நான் சொன்னபடிதானே உத்தரவாயிற்று என்று சொல்ல நல்லானும் ஆண்டவர் பெருமையை அறிந்து அவரை வணங்கி வீடு திரும்பினார்.

**மெய்யப்ப செட்டியாருக்கு உபதேசம் :**

காரைக்குடியைச் சேர்ந்த அழகன் செட்டி மகன் மெய்யப்பன் என்பவர் ஆண்டவரிடம் உபதேசம் செய்தருள வேண்டிய பொழுது ஆண்டவரும் அவரை நோக்கி இன்று அமாவாசை இருள் அல்லவா? ஒன்றும் விளங்காதே என்றார். சிலநாள் சென்றபின் காரைக்குடிக் குளக்கரையில் உள்ள கல் மண்டபத்தில் ஓர் வடநாட்டு அந்தணத் துறவி வந்திருப்பதை அறிந்து அவரிடம் போய் உபதேசம் செய்யுமாறு வேண்ட அவரும் அனைத்தையும் மண்மயமாய்ப் பார் என்று உபதேசம் செய்தருளினார். இது சரிதானா என்பதை அறிந்து கொள்ள விரும்பிய மெய்யப்ப செட்டியார் ஆண்டவரிடம் சென்று அந்தணத் துறவி கூறியது சரிதானா ? என்று கேட்டார். உடனே ஆண்டவரும் அவரை நோக்கி அத்துறவி கூறியதும் மண்மயம்தான். வேத சாத்திரங்கள் கூறுவதும் மண்மயம்தான். வசிட்டர் வியாசர் போன்ற முனிவர்கள் அருளியதும் மண்மயம் தான். இறைவன் முதலானோர் அருளியதும் மண்மயம்தான். இந்தத் திருநெல்லை அறிய என் சம்மதமும் மண்மயம்தான் என்று உறுதிபடக் கூறினார்.

**ஆண்டவர் கற்பக விநாயகரை வணங்குதல் :**

ஒருமுறை கருங்காலக்குடி என்னும் ஊருக்குச் சென்று ஆண்டவர் திரும்பும் வழியில் பிள்ளையார்பட்டி நகரத்தார் ஆண்டவரை ஆலயத்திற்கு எழுந்தருளுமாறு வேண்ட, ஆண்டவரும் ஆலயம் சென்று கற்பகப் பிள்ளையாரை வணங்கி

முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழு(து)அகற்றும் முகத்தி னானை
அற்பசுகத்(து) எனைஅழுத்தா ஐங்கரனைப்
பிற்பவமும் அகற்றும் கோவைச்
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம்பணியும் துணைத்தா ளானைக்
கற்பகத்தின் மிடிஅகற்றும் கற்பகமாம்
விநாயகனைக் கருத்தில் வைப்பாம்

என்று பாடி அருளினார்.

**கல்லல் வெள்ளையப்ப அய்யாவுக்கு எதிர்வருவதை உணர்த்தல் :**

ஒரு நாள் கல்லல் அய்யா ஆண்டவரைத் தரிசிக்க வந்த பொழுது ஆண்டவர் அவரை நோக்கி இதுநாள்வரை எங்கிருந்தனை? என்று வினவக் கல்லல் அய்யாவும் கல்லலில் கட்டியுள்ள மடத்திற்கு நேர் கிழக்கில் ஒரு கிணறு கட்டி அகற்குக் கல்லும் கட்டினேன், அதனால் இங்கு வரச்சில தினங்கள் ஆகிவிட்டன என்று சொன்னார். ஆண்டவரும் அது என்றும் இடி கிணறுதானே அதற்கேன் இத்தனை முயற்சி என்றார். அதுகேட்ட கல்லல் அய்யா அச்சம் அடைந்து தென்குளக்கரையில் நிற்கும் பொழுது கல்லலிலே இருந்து வந்த ஏவலாள் ஒருவன் வந்து தாங்கள் வெட்டிய கிணறு சற்று முன்பு இடிந்து போனது என்று சொல்லக்கேட்டு அது எத்தனைதரம் கட்டினாலும் இடிந்துதான் போகும் அதனால் வேறு கிணறு வெட்டிக் கொள்ளுங்கள் என்று சொல்லி அனுப்பினார்.

**அப்பாப் போலீசு ஆண்டவரைச் சரணடைதல்:**

ஆண்டவர் ஒருநாள் தமது இல்லத்தில் பாரதச் சொற்பொழிவு நடந்த போது எழுந்தருளி இருந்தார். அவ்வூரில் தன் அதிகாரத்தினால் அனைவரையும் துன்பப்படுத்திக் கொண்டிருந்த அப்பாப் போலீசு

என்பவன் முன்னர்ச் செய்த புண்ணியத்தால் ஆண்டவரின் தமையனார் மாயாண்டி செட்டியார் மூலம் ஆண்டவர் சொற்பொழிவு செய்வதை அறிந்து சட்டை தலைப்பாகை மேல் துண்டு ஆகியவற்றை அணிந்த நிலையில் வந்திருந்து ஆண்டவர் உபதேசத்தைக் கேட்டுப் பிரமித்து மறுநாள் அவ்வாறு ஆடம்பரம் இன்றிப் பயபக்தி விசுவாசத்துடன் ஆண்டவரை வணங்க நற்குணம் உடையவனாய் அன்றே தன்னுடைய வேலையை விட்டு விட்டு ஆண்டவரைச் சரணடைந்து இடைவிடாது ஆண்டவருக்குத் தொண்டு செய்து வந்தான்.

## ஆண்டவரும் அவருடைய தம்பி வேங்கடாசலம் செட்டியாரும் :

ஆண்டவர் தம் இல்லத்தில் இருந்த போது ஒருநாள் ஓர் அந்தணர் வந்து திருமணத்தின் பொருட்டு உதவி கேட்க ஆண்டவர் வரவேற்று, பணப்பெட்டியைத் திறந்து தங்கள் அதிட்டம் எப்படியோ அப்படியே இருக்கும் என்று கூறிப் பையைக் குப்புறக் கொட்டியருள அவரும் மிக்க மகிழ்ச்சியோடு எடுத்துக் கொண்டு போனார். அது கண்ட ஆண்டவரின் இளவல் வேங்கடாசலம் என்பவர் எங்களுக்கு இது சரிப்படாது என்று சொல்ல நீங்களும் எங்களுக்குச் சரிப்பட மாட்டீர்கள் என்று கூறிய ஆண்டவர் அடியாரோடு கோவிலூர் திரும்பினார். வேங்கடாசலம் செட்டியார் தம் சுற்றத்தாரிடம் ஆண்டவர் பணப்பையைத் தலைகீழாகக் கொட்டிய முறையைச் சொல்லி இப்பிள்ளை இருப்பதைக் காட்டிலும் இறப்பதே மேல் என்றிட்டனர். அதனைச் சுற்றத்தார் வாயிலாகக் கேள்வியுற்ற ஆண்டவர்

சுற்றத்தார் இன்னம்தொ லைந்தான் இலைஎனவே
பற்(று)அற்றே நைந்(து) இருத்தல் பண்(பு)ஆமோ - கொற்றனுடன்
பாதி பறித்(து) இருக்கும் பண்ணவியே உன்னைஅடைந்(து)
ஈ(து)இருக்க ஞாயம்இலை யே.

என்று ஒரு வெண்பாவைப் பாடியருளினார்.

- தொடரும்

# கீதாசாரத் தாலாட்டு

(தொடர்ச்சி)

நூல்

47. **தான் பிரமம் என்றறிந்தும் தனுவைத்தான் என்ற புத்தி**
**ஏன் போகவில்லை அதை எனக்கறியப் புகலும்என.**

கண்ணா ! நானே பிரம்மம் என்ற அபரோட்ச ஞானம் வந்த பிறகும் 'என்னுடைய உடல் தான் நான்' என்ற எண்ணம் ஏன் போகவில்லை? அதை எனக்குப் புரியும்படி கூறுங்கள் என்று அருச்சுனன் கேட்டான்.

48. **கேள்வியினால் மனனத்தால் கிளர்ந்தயோ கங்களினால்**
**ஆள்பிரமத்து அனுபவம்வந்து அதுதீரும் என்றவரோ.**

கேள்வியாலும் மனனத்தாலும், தொடர்ந்து செய்யும் சாதனைகளாலும் பிரம்மத்தை அறியும் அனுபவம் உண்டாகும். அப்போது சரீரமே 'நான்' என்ற உணர்வு நீங்கும் என்று கூறிய கண்ணபிரானோ.

(ஞானாசிரியனை அடைந்து குருமுகமாகச் சித்த சுத்தியுடன் நான்யார் என்ற கேள்விக்குத் தெளிவான விளக்கம் கேட்பது சிரவணம்.

மனத்தால் குரு முகமாகக் கேட்டதைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்துத் தெளிவடைதல் மனனம்.

ஆத்மாவுக்குப் பயனில்லாத விஷயங்களைத் தடுத்துத் தொடர்ச்சியாக அஹம் பிரம்மம் என்று சிந்தித்தல் நிதித்தியாசனம்.)

49. **ஆதிஆம் சிற்சொரூபம் ஆகாத தான்இனிமேல்**
**சோதிமனன் ஆதியினால் சொரூபம்ஆ மோஎனவே.**

ஆத்மாவாகிய தான் முன்னரே அறிவு வடிவான பிரம்ம சொரூபமாக இல்லாதிருந்து தற்போது கடைபிடிக்கும் சிரவண, மனன, நிதித்தியாசனங்களினால் அறிவு வடிவான பிரம்ம சொரூபம் ஆகுவனோ? என்று அருச்சுனன் கேட்டான்.

50. **எப்போதும் சின்மயம்தான் எனல்மறந்து தேடுவது**
**செப்புமிடற்று அணிஇருக்கத் தேடுதல்போல் என்றவரோ.**

ஆன்மாவாகிய தான் முக்காலத்தும் ஞான வடிவமே என்பதனை மறந்து தேடுவது, தான் முன் அணிந்துள்ள அணி கழுத்தில் இருக்கும் போதே அதனை மறந்து அது தொலைந்து போய் விட்டதாக எண்ணித் தேடுவது போலாகும் என்று கூறிய பெருமாளோ ?

51. **தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொரூபம்**
**கூடுவனோ யான்என்கு றைதீரச் சொல்லும்என.**

சிரவணம் மனனம் முதலிய பயிற்சிகளால் இந்த உடல்தான் நான் என்ற உணர்வு விட்டு நீங்கி ஞான வடிவினை நான் அடைவேனோ என்ற எனது சந்தேகம் தீர்த்தருள்வீராக என அருச்சுனன் வேண்டினான்.

52. **வந்தஉடல் வேறுஆயும் வாசனையால் தான்எனலால்**
**சந்தயம்என் தன்சொரூபம் தான் ஆதற்கு என்றவரோ.**

மானுடப் பிறவியில் வந்த சரீரம் பூர்வ ஜன்ம கர்ம வினைகளினால் தானே வந்தது ? பழைய வாசனைகளின் தாக்கத்தால் உடலை நான் என்று நினைக்கிறாய். அது நீங்கிய உடனே உண்மையான ஆத்ம வடிவத்தை உணர்ந்து, ஆன்ம சொரூபமாகவே நிலை பெறுவாய் என்பதில் சந்தேகமே கிடையாது என்று விடை கூறிய கண்ணனோ ?

**53. தனுவைத்தான் எனும்பிரமை சத்தஞா னத்தில் அறாது**
**அனுபவமெய்ஞ் ஞானத்தால் அறும் வகைஏது**
**உரையும்என**

உடலை ஆத்மா என்று கருதும் மயக்கம் கேள்வி அறிவினால் நீங்குவதில்லையே. அனுபவ வடிவான மெய்ஞானத்தை அறிந்தபிறகே அப்பிரமை நீங்குகின்ற வழிவகை யாது ? என்று அருச்சுனன் வினவ,

**54. விளக்குவிளக்கு எனும்அதனால் வெய்யஇருள்**
**போய்விடுமோ**
**துளக்கம்இலா விளக்குஏற்றில் தொலையும்இருள்**
**என்றவரோ.**

விளக்கு விளக்கு என்று பலமுறை சொல்வதாலேயே இருள் நீங்கி விடுமா ? நீங்காது. அசைவில்லாத விளக்கு ஏற்றப்படும் போதுதான் இருள் நீங்கும் என்று கூறிய கண்ணனோ ?

**55. நெடுங்காலம் ஆன்மாவை நீங்காத அஞ்ஞானம்**
**விடுங்காலம் எந்நாளோ மெய்ஞ்ஞானத் தால்எனவே.**

நீண்ட நாட்களாக ஆத்மாவை விட்டு நீங்காது கூடவே இருந்த அறிவின்மையானது மெய்யறிவினால் நீங்குகின்ற காலம் எந்நாளோ? என்று அருச்சுனன் கேட்டான்.

**56. அந்தகா ரம்குகையில் ஆயிரம்நாள் இருந்தாலும்**
**செந்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல் என்றவரோ.**

குகையில் உள்ள இருள் நெடு நாளாக இருந்தாலும், சிவந்த சுடரைக் கண்ட போதே இருள் நீங்குவது போல் தத்துவ அறிவு உண்டானவுடன் அறிவின்மையும் நீங்கும் என்று கூறிய பெருமானோ?

57. **கருமயோ கம்தவமே காரணமா நீங்காமல்**

**அருமையா ஞானம்வந்தோ அஞ்ஞானம் போம்எனவே.**

அஞ்ஞானமானது யாகம் போன்ற புண்ணியச் செயல்களாலும் யோகம் தவம் இவற்றினாலும் நீங்காமல் அடைதற்கரிதான மெய்யறிவு உண்டான பின்தான் நீங்குமோ ? என வினவினான் அருச்சுனன்.

58. **குத்துவெட்டும் படைகளினால் கூடுமோ இருள்துரக்க**

**உத்தமம்ஆம் ரவிஉதித்தால் ஓடும்இருள் என்றவரோ.**

குத்தவும் வெட்டவும் பயன்படும் ஆயுதங்களால் இருளினை நீக்கிட முடியுமோ ? முடியாது. உலகிற்கு எல்லா நன்மைகளையும் செய்விக்கும் சூரியன் உதயமானால் இருள் தானாகவே ஓடிவிடும் என கூறிய கண்ணனோ ?

59. **அஞ்ஞான இருள்துரக்க அறியாத நல்லகன்மம்**

**மெய்ஞ்ஞாலம் தனைப்பரிக்கும் விதம்எவ்வாறு**

**எனவினவ**

அஞ்ஞானம் என்ற இருளை நீக்குவதற்கு நல்ல கருமங்கள் உதவி செய்யாது என்றால் உண்மை என்று நான் நம்பிக்கொண்டிருக்கும் இந்த உலகத்தில் நான் செய்த நல்ல கருமங்களினால் எனக்கு ஏற்படும் பயன் யாவை ? என அருச்சுனன் கேட்டான்.

60. **இந்திரசா லம்போல இவ்வுலகை நம்மிடத்தில்**

**தந்திரமாத் தோற்றுவித்தோம் சத்தியம்அல் என்றவரோ**

இந்திர சாலம் செய்யும் மந்திரவாதியின் வித்தையில் தோன்றிய பொருள்கள் எல்லாம் நிஜமான பொருள்களாகத் தெரிவது போல, நம்மிடத்தில், பொய்யான இவ்வுலகைச் சத்தியம் போலத் தோற்றமளிக்கச் செய்யும்படி விளையாட்டாக உண்டாக்கினோம். ஆதலின் இது உண்மையன்று பொய்யே எனக் கூறிய கண்ணனோ?

61. **மித்தைஎனும் சகத்துநின்பால் விளங்குமோ எனவினவ**
**சுத்திதனி லேரசதம் தோன்றுதல்போல் என்றவரோ**

பொய் என்று அருளாளர் கூறும் இவ்வுலகம் பிரம்ம சொரூபமான உன்னிடத்துத் தோன்றுமோ ? என அருச்சுனன் கேட்க, கிளிஞ்சலிடத்தில் வெள்ளி தோன்றுதல் போல் மெய்யே வடிவான நம்மிடத்தில் இப்பொய்யாகிய உலகம் உண்டாயிற்று என்று பதில் கூறிய கண்ணபிரானோ ?

62. **அயல்வெள்ளி சுத்தியின்மேல் ஆரோபி தம்கூடும்**
**இயல்உள்ள சகமும்முன்வேறு இருந்ததும்உண்**
**டோஎனவே**

வெள்ளி என்ற பொருளை நான் அறிவேன். அதனால் கிளிஞ்சலின் பளபளப்பைக் கண்டு வெள்ளி என நினைக்கிறேன். ஆனால் இந்த உலகத்தை நான் அறியும் போது இதற்கு முன்னால் தாங்கள் சிருஷ்டித்த உலகம் வேறு ஒன்று இருந்ததா ? என்று அருச்சுனன் வினவ,

(வெள்ளியைத் தெரிந்த படியால் சிப்பியில் வெள்ளி தெரிந்தது. அதுபோல நான் மயங்குவதற்கு ஏற்கனவே பொய்ப் பிரபஞ்சம் ஒன்று இருந்ததா? )

63. **மனமயக்கம் பிடிக்கல்இல்லா வத்துவும்தோன்**
**றிடும்அதுவோ**
**கனவில்விண்ணில் தான்பறக்கக் கண்டதுபோல்**
**என்றவரோ**

உள்ளம் மயக்கம் அடைந்தால் இல்லாத பொருளும் உள்ளது போல் தோன்றும். எப்படி என்றால் பறக்க முடியாதவன் தானே விண்ணில் பறப்பதாகக் கனவு கண்டது போல் ஆகும் என்று கூறிய கண்ணபிரானோ ?

64. **கனவுபோல்பிர பஞ்சம்என்றீர் கண்விழித்தால்**

**கனவுபொய்யாம்**

**வினவுசகம் தினமும்மெய்யா விளங்குவதுஎன்**

**சொல்லும்என**

கனவு பொய்யாவது போலவே இவ்வுலகமும் பொய் என்றீர். அந்தக் கனவுலகம் கண் விழித்தால் பொய்யாகி விடும். நான் கேட்கும் இவ்வுலகம் நாள்தோறும் சத்தியமாக விளங்குவதாகத் தோன்றுகிறதே! அதற்கு யாது காரணம் என அருச்சுனன் வினவ,

65. **மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞானம் வரும் அளவும்**

**பொய்யாம்பின் கனவுஅதுபோல் போதம்வரில்**

**என்றவரோ**

தத்துவ ஞானம் வருகின்ற வரையும் இவ்வுலகம் சத்தியமாகத் தோன்றும். தத்துவ ஞானம் வந்த பின்னர் கனவில் காணும் உலகம் போல் கண்ணாற் காணும் உலகமும் பொய்யே என்பது விளங்கும் எனக் கூறிய கண்ணபிரானோ ?

- தொடரும்..





## நாச்சியப்ப சுவாமிகள்
## கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கல்வித் துறையில் பாரம்பரியமிக்க அனுபவம் நிறைந்த கோவிலூர் மடாலயம் நடத்தும் இக்கல்லூரியில் (Subject to approval) மாணவ மாணவியர் சேர்ந்து படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

**2012-2013 ஆம் கல்வி ஆண்டுக்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.**

**கற்பிக்கப்பெறும் பாடப்பிரிவுகள் :**

| | |
|---|---|
| பி.எஸ்.ஸி கணிதம் | பி.எஸ்.ஸி கணினியியல் |
| பி.காம். | பி.காம் (கணினிப் பயன்பாட்டுடன்) |
| பி.பி.ஏ | பி.ஏ. ஆங்கில இலக்கியம். |

தொடர்புக்கு : **04565 - 234523, 94434 42361**

---

## நகரத்தார் திருமணச் சேவை மையம்
## கோவிலூர்

நம் சென்னைத் திருமடத்தில் கடந்த ஒன்பதாண்டுகளாக, தேவகோட்டை உயர்திரு. சோம. லெட்சுமணன் அவர்கள் வழிகாட்டுதலின் பேரில் நகரத்தார் திருமணச் சேவை மையம் நடைபெற்று வருகிறது.

அதன் சேவையை விரிவுபடுத்தி இப்போது நம் கோவிலூர் திருமடத்திலும் தன்னார்வத் தொண்டர்களின் ஆதரவால் நந்தன ஆண்டு சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

வாரந்தோறும் சனிக்கிழமை காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை திருமணச் சேவை நடைபெறுகிறது. அனைவரும் சேவையைப் பயன்படுத்த வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : **www.nagarathar.net , www. nagaratharmatrimony.com**

# சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நடத்தும் கல்வி நிறுவனங்கள்

1. கோவிலூர் ஆண்டவர் பாரம்பரியக் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி

   அ. திருமுறைக் கல்லூரி - 1995

   ஆ. நாதஸ்வரக் கல்லூரி - 1995

   இ. தவில் கல்லூரி - 1995

   ஈ. கல் சிற்பக் கல்லூரி - 2004

   உ. ஐம்பொன் சிலைக் கல்லூரி - 2005 (உலோகச் சிற்பம்)

   ஊ. மரச்சிற்பக் கல்லூரி - 2006

2. சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி - 1995

3. கோவிலூர் ஆண்டவர் மாண்டிசோரி பள்ளி - 1995

4. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி - 2007

5. கோவிலூர் ஆண்டவர் யோகா ஆராய்ச்சி மையம் - 2007

6. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி - 2009

7. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி - 2010

8. கோவிலூர் ஆண்டவர் சமுதாயக் கல்லூரி - 2010

9. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - 2012ல் தொடங்கப் பெற உள்ளது.